# கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சாவூர்.

கருந்திட்டைக்குடி
துந்துபி, ஐப்பசி, ௲

அன்புள்ள ஐ,

இச்சங்கத்தின் ஏழ் எட்டாவ தாண்டுகளின் விழாவில் திரு வாளர் பா. வே. மாணிக்க நாயக்கரவர்களால் எழுதிப் படிக் கப்பெற்ற "அஜ்ஞாநம்" எனப் பெயரிய கட்டுரை, கழகக் கெழுமி யிருந்தோரும் அல்லோருமாகிய பல்லோர் வேண்டு கோளை முன்னிட்டுப் பதிப்பிடலாயிற்று. தங்களை யொத்த கல்விச் சான்றோர் சிலவர் ஆய்வுரை (criticism) களும் பெற்று அவைகளையு முடன் சேர்த்துக் கட்டுரையை வெளியிடல் நேரிய தெனத் தோன்றலின் அக் கட்டுரையின் படி யொன்று இதனு டன் தங்களளிய நோக்கத்திற்கு அனுப்பியிருக்கிறது.

பதிப்பு முடிவதன் முன்னரே பலபடிகளுக்குக் கைவிலைக்கு அனுப்ப வேண்டல்கள் (V. P. P. Orders) வந்திருக்கிற படியால் கூடிய விரைவில் அன்புடன் விடையிறுத்தல் வேண்டும்,

தங்கள் தாழ்மையுள்ள ஊழியன்,
த. வே. உமாமகேசுவரன்,
சங்கத் தலைவர்.

திருவாளர் ______________________ அவர்கள்

Jegam & Co, Trichinopoly.

ஓம்.

# முகவுரை.

உலகமுளதேல் அஜ்ஞானமுளதாம்: அஜ்ஞானமுளதேல் உலகமுளதாம். உலகமிலதேல் அஜ்ஞானமிலதாம்: அஜ்ஞானமிலதேல் உலகமிலதாம். ஆகலின், அஜ்ஞானத்திற்கு முன்னுமின்று பின்னுமின்று என்பதை மறுக்கவியலாது. இஃதிவ்வாறாயிருக்க அஜ்ஞானத்திற்கு முகவுரை, முன்னுரை, பாயிரம் எனவொன்று மொழிவதும் அஜ்ஞானமேயன்றோ? 'பாயிரமில்லது பனுவலன்று' என்பார்க்கு முகவுரை மொழியாது விடுவதும் அஜ்ஞானமாகுமாகலானும், சொல்லினும் சொல்லாதிருக்கப்பெறினும் அஜ்ஞானப் பட்டத்தினின்றும் தப்ப வழியின்மையானும், முகவுரை சொல்லவே துணிந்தேன்.

என் அஜ்ஞானவுரை ஏடுகளைக் கண்ணுற நேர்ந்த எனது நண்பர்கள் பலர், இவ்வஜ்ஞானத்தின் வரலாறு என்னென்று வினவாதிருந்திலர். முதல் முப்பொருள்களுள் ஒன்றாகிய அஜ்ஞானத்திற்கு [1]இயலாறு உண்டேயன்றி [2]வரலாறு இலதென அறியா அஜ்ஞானத்தானே எனது நண்பர்கள், அஜ்ஞானத்திற்கு வரலாறு கேட்கலாயினர். அஜ்ஞானத்திற்கு வரலாறு வினவுவதும் தவறு; சொல்வதும் தவறு. ஆனால் அஜ்ஞானப் [3]பேராட்சி வளத்தின் அஜ்ஞான பரத்வம்) சான்றாகத் தவறிழைத்தலே சரியினுஞ்சரி, என உணர்ந்து இவ்வஜ்ஞானத்தின் வரலாறு கூறவியைந்தேன்.

1911-ஆம் ஆண்டின் இறுதியிலிருந்து என் அலுவலினின்றும் அடுத்தடுத்து நீண்டவிடுமுறைகள்பெற்று, விடுமுறைக் காலங்களைத் [4]தரைச்செலவினும், அறிவு நூலாராய்ச்சிகளினும், அவைகளைச் சார்ந்த சொற்பொழிவுகளினும் செலவிட்டு வந்ததில், நம் அருமைத் தமிழ்மொழி என் முயற்சிகளில் பெரும் பங்கைக் கொண்டது. இவ்வாறு நிகழுங்காலத்து, 1919-ஆம் ஆண்டின் தொடக்கத்தில், தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்துக் கருமத்தலைவர் (Secretary) திருவாளர் அ. கணபதி பிள்ளையவர்கள் என்னைக்கண்டு சங்கத்து

---

1. உள்ளதாம் இயற்கை 2. தோற்றம், பிறப்பு. 3. சிறப்பின். 4. பயணம் போதலினும்.

ஆண்டுவிழா அணித்தில் நடைபெறுமென்றும், அவ்விழாவில் யான் ஒரு பெருஞ் சொல் நிகழ்த்த வேண்டுமென்றும், வேண்டிக்கொண்டதோடு, அவ்வுரையின் [1]தலைப்பு இன்னதெனத் தெரிவித்தல் வேண்டுமென்றும் வற்புறுத்தினர். தனக்கெனவாழாத் தமிழ்த் தொண்டர்களிற் சிறந்தோராய எனது நண்பர் வேண்டுகோளை யான் எஞ்ஞான்றும் மறுக்கும் வலியிலேனாகலின், அவர் விரும்பியவாறே சொற்பொழிவு செய்வல் என்று ஒப்பினேன். ஆயினும், எடுத்துக்கொள்ளும் [2]பொருள், விழாவின் தலைவருக்கும் [3]குழுவிற்கும் ஏற்றதொன்றாக இருக்க வேண்டியது இன்றியமையாதது ஆதலால் கூடுங் குழுவின் [4]உள்ளப்போக்கு யான் அறிவேனாயினும், தலைவரும் இன்னாரென்று தெரிந்தே பெருஞ்சொல்லின் தலைப்புத் துணியவேண்டும் என்று மொழிந்தேன்.

இது கேட்ட நண்பர், 'பெரும்பாலும் திருப்பாதிரிப்புலியூர் அடிகள் மெய்ஞ்ஞானியாரவர்களே தலைமை பூண ஒப்பக்கூடும்' என விடையிறுத்தனர். யான் 'அவ்வாறாயின் யான் 'அஜ்ஞாநம்' பேசுகின்றேன்' என விளையாட்டாகச் சொல்லினேன். ''ஏன் 'அஜ்ஞாநத்தை' விரும்பினீர்கள்?'' என்றி அவர் வினவ, ''கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் [5]ஓயாது நுகர எங்கும் எப்போதும் மலிந்து கிடப்பது 'அஜ்ஞாநம்' ஒன்றேயாதலின் அதனைப்பற்றி யான் ஓயாது விழா நாட்கள் முழுவதினும் பேசுவதாலும், [6] பொருட்பஞ்சமும் முயற்சி வேண்டுதலும் இல்லை; அம்மலிவு அறிந்தே அஜ்ஞாநத்தை விரும்பினேன்'' என்று விளக்கினேன். அதுகேட்டு அவரும் முற்றிலும் ஆர்வம் உற்றனர்.

அதன்பின் சங்கவிழாவின் ஏற்பாடுகள் எல்லாம் எனக்குத் தகவல் ஒன்றும் இன்றியே செய்யப்பெற்றன. இதனிடையில், 31—3—1919ல் யான் விடுமுறையினின்றும் மீண்டு என் அலுவலை வேலூரில் ஒப்புக்கொண்டேன். ஒப்புக்கொண்ட இரண்டாவது திங்கள் தொடக்கத்தில் சங்க அமைச்சரிடமிருந்து [7]அஞ்சல் வழியாகப் பதிப்பிட்ட விளம்பரமொன்று கிடைக்கப் பெற்றேன். அதில், என் பெயரோடு பொருத்தி, 'அஜ்ஞாநம்' என்று குறித்திருந்தது. அது கண்டபோது, அச்சேர்க்கை மிகவும் பொருத்தமானது, பொய்யென்பதிலாதது என்று பெருமகிழ்வுற்றே னெனினும், பல்லாண்டுகள் அலு

1. பெயர். 2. விஷயம். 3. கூட்டம். 4. அபிப்பிராயம், 5. இடைவிடாது அனுபவிக்க (திருக்குறளிலிருந்து எடுத்தாண்டது). 6. விஷயக்குறைவும். 7. தபால்.

வலினின்றும் விடுமுறை பெற்றிருந்து அணித்தில் வேலை ஒப்புக்கொண்டமை யின், கரந்தை விழா நாட்களில் அவண் சென்று அஞ்ஞானத்தை மொழிவதற்கு [1]இடங்கேடாக இருந்தபடியுணர்ந்து சிறிது மகிழ்ச்சி குன்ற நேர்ந்தது.

என்றாலும், அஞ்ஞானப் பெருவிருந்தை யானும் சங்கக்குழுவும் இழந்துவிட [2]உள்ளமொன்றாது, யானே சென்று அஞ்ஞானம் நவிலும் [3]ஊழ் இன்றாயினும், என் அஞ்ஞானத்திற்குக் கொடுத்திருந்த ஒன்றேகால் நாழிகை நேரத்திற்கு வேண்டிய அளவு ஏடுகள் எழுதியாவது அனுப்புவதே சரி எனத் துணிந்தேன்.

என் அலுவலின் இடையிடையே சிறுநேரங்களைத் திருடிக் கையச்சுப் பொறி (Typewriter) யால் அஞ்ஞானத்தை அடித்து முடிய 24—5—1919 ஆயிற்று. என் [4]'நிறைமொழியாணையிற்கிளந்த' அஞ்ஞான மந்திரம் முடிந்த அப்பொழுதே அதன் வன்மை [5]கண்கூடாகத் தோன்றத் தொடங்கிற்று.

அடுத்தநாள் இருபது நாழிகைக்குள் அஞ்ஞான வேடுகள் யான் தங்கியிருந்த வாழைப்பாடி யென்னும் சிற்றூரினின்றும் கரந்தை சேரவேண்டியிருந்ததால் அஞ்சல் வழியே அனுப்ப முயன்றேன் ஆனால் அஞ்சல்வண்டிக் குதிரைக்கு [6]ஊறு நேர்ந்து வரவேண்டிய பொழுதில் வரவில்லை. வாடகைக்கு நடக்கும் தமியங்கி வண்டி (Motor Bus)யில் ஆள்வசம் கொடுத்தனுப்பவும் இயலாது தமியங்கியின் பொறி (Engine) கெட்டு வாராது நின்றுவிட்டது. ஏடுகள் எழுதிமுடிந்தும் அனுப்ப இயலாததற்கு யான் வருந்தியது உணர்ந்த பொதுவேலைக் கண்காணி (Public Works Department Overseer) ஒருவர், தன் ஈருருளி (Bicycle) வண்டிமீது சேலம் சென்று ஒரு காலாள் (Peon) கையிற்கொடுத்து இருப்புவழி வண்டி (Railway Train)யில் கரந்தைக்கனுப்புவதாக ஒப்பி ஏடுகளை வாங்கிச் சென்றனர். அவ்வாறு சென்ற நண்பர் சேலம் சுங்க எல்லை சேர்வதன் முன் உருளி (Wheel)யில் முள்தைத்து காற்றுக் கழன்றுபோக, நடந்து சென்றும், வண்டிக்கு விளக்கின்மையால் சில செந்தலைக் காவலர் (Constables) களிடம் முட்டுண்டும், இறுதியில் பொது

1. இடைஞ்சல். 2. மனங்கொள்ளாமல். 3. விதி, அதிருஷ்டம். 4. குறைவில்லா பெரியோர் கட்டளையை மேற்கொண்டு சொல்லிய (தொல்காப்பியத்தினின் றெடுத்தாண்டது). 5. பிரத்தியக்ஷமாக. 6. துன்பம்.

வேலை மன்றக் கட்டிடத்தைச் (Public Works Department Office) சேர்ந்து, அவ்விடம், கள்ளை அவன் குடித்தானோ அன்றி அவனைக் கள் குடித்தமோ என்பது தெரிவதற் கியலாத நிலையிற் கிடந்த காலாள் ஒருவனை இருந்தானாகலின், அவனை எழுப்பி நிறுத்தி அழைத்துப் போய்த் திருச்சிராப்பள்ளி வழியாகத் தஞ்சைக்குச் சீட்டு வாங்கிவாவென்று அனுப்பினர். அக் குடியன் மதுரைக்குச் சீட்டு வாங்கிவந்து வண்டியிலும் ஏறிவிட்டான். ஆனாலும் வண்டி புறப்படும் தருவாயில் பொது வேலைக் கண்காணியாருக்கு ஐயம்வந்து, சீட்டை வாங்கிப்பார்க்க மதுரை யென்று இருக்கக்கண்டு, கள் ஞாநம் சிறிது கலையும்படி அவன் கவுள்களிற்றாக்கி, திருச்சிராப்பள்ளி யடைந்ததும் வேறுசீட்டு தஞ்சைக்கு வாங்கிக்கொண்டு போகும்படி நோவ நோவக் கற்பித்து அவனை அனுப்பினர் எனப் பின்னால் தெரிய வந்தது.

இத்தகைய அஜ்ஞாந [1]ஓட்டோலக்கங்களோடு சென்ற அஜ்ஞாந ஏடுகள் கரந்தையில் தக்கவேளையிற் சேர்ந்து திருப்பாதிரிப்புலியூர் அடிகள் மெய்ஜ்ஞாநியார் கொலுவில், எனக்காக எனது நண்பர் ஒருவரால் அரங்கேற்றப் பெற்றன.

யானே அஜ்ஞாநமாகவிருந்து, மெய்ஜ்ஞாநத்தை ஏசுகின்ற முறையில் [2] (நிந்தாஸ்துதி) [3]முப்பொருளுண்மைகளை விளக்கிக் காட்டும் முயற்சியுடன் எழுதிய அவ்வேடுகளைக் கழகத்திற் படித்தாண்டும் அவ்வஜ்ஞாநப் பெருமந்திரம் தன் ஒப்புயர்வின்றிய வன்மையால் குழீஇயினோரை மயக்கத்தி லாழ்த்தியதெனக் கழகம் புக்கிருந்த சில நண்பர்கள் சொல்லக் கேட்டு இறும்பூதெய்தினேன். அங்ஙனமே இனி இவ்வஜ்ஞாநப் பதிப்பைக் கண்ணுறுவோர்க்கும் அத்தகைய மயல் மேற்கொள்ளாதபடி இம்முகவுரை எழுதலாயிற்று.

இப்போது வழங்கி வரும் வைதிக சித்தாந்தம் என்னும் கோட்பாடுகளையும் இப்போது நம்மவர்கள் சிறு பான்மையோரே கற்று வருவதாலும், இதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் வழங்கி வந்ததும் வைதிக சித்தாந்தத்திற்குச் சிறிது மாறுபட்டதும் தோல்காப்பியத்தில் விரவிக்கிடப்பதுமான கந்தழிக் கொள்கை இப்போது மறைந்திருப்பதாலும், யான் ஆராய்ந்த எக்கொள்கைகளிலும் இக் கந்தழிக் கொள்கையே இயற்கை உண்மைகளுக்கும்,

---

1. திருவிழாச் சிறப்புக்களோடு. 2. பழிப்பதுபோலப் புகழ்த்திறம்புனைதல். 3. பதிபசுபாசம்.

அறிவுநூல், எண்ணூல், அளவைநூல் முதலாயினவற்றோடும் [1]முரண்படாது நிற்கின்றது என்று தோன்றியபடியாலும், அவ்வாறு மறைந்து கிடக்கும் பண்டைத்தமிழ் நாட்டுக் கந்தழிக் கொள்கையைச் சிறுபிள்ளைகளும் உளங்கொள்ளும் விளையாட்டு நடையில் எழுத எண்ணித் துணிந்தேன். அஃதெம் மட்டில் நிறைவேறியதென்பது ஓதுவோரே மதிக்கற்பாலது.

இக்கட்டுரையின் இறுதிப் பகுதியில் அஞ்ஞான மெய்ஞ்ஞான வேற்றுமைகளுக்கேற்ப, வடிவுவேற்றுமைகளும் இயற்கையி லமைந்திருப்பவைகளை மிகவும் சுருக்கமாகச் சொல்லியுள்ளேன். இப்பகுதி எழுதியுள்ள அளவில் எளிதில் உணரக்கூடியதன்று. ஒன்றேகால் நாழிகை நேரத்திற் படிக்கவேண்டிய அளவே கட்டுரை எழுதவேண்டி யிருந்த படியாலும், இப்பகுதியிற் சொன்ன பொருள் அஞ்ஞான மெய்ஞ்ஞானங்களோடு ஒன்றுபட்டதாகையாலும், விரிக்கிற்பெருகுமாதலாலும் மிகவும் சுருங்கச் சொல்ல நேர்ந்தது.

ஆயினும் ஐரோப்பியர்கள் டார்வின் (Darwin) என்பாருக்குப் பின் கண்டறிந்த இயற்கை யுண்மைகளையும், இன்னுங் காணாதிருக்கின்ற பெரும் பகுதிகளையும் நம் தமிழ்முன்னோர் பல்லாயிரம் யாண்டுகளுக்கு முன்னரே நன்குணர்ந்திருந்தார்களாதலாலும், அதன் விரிவு ஐரோப்பியர்களுக்கும் ஓர் புதுக்கல்வியைக் கொடுக்கக் கூடியதாதலாலும், இப்பகுதியை ஆங்கிலத்தில் எழுத விரும்பித், திருச்சிராப்பள்ளியில் 1921-ம் ஆண்டு செப்டம்பர் திங்களில் 'வடிவோடியைந்த அறிவின் தோற்றம்' 'The Evolution of Intellect in co-ordination with Form' என்னுந்தலைப்பில் மூன்று பெருஞ் சொற்கள் மொழியலாயின. இன்னும் பொருள் முடிந்தவுடன் அதனையும் வெளியிட எண்ணியிருக்கின்றேன்.

இச்சிறு சுவடியைக் கண்ணுற நேருங் கல்வியாளர்கள் அவரவர்களுக்குத் தோன்றும் குற்றங்குறை ஐயப்பாடுகளை அருள்புரிந்து எனக்கு எழுதுவார்களாயின் யான் நன்றியறிதலுடையவனாவேன்.

தங்கல்-சித்தாநகரம்
6—2—22

பா. வே. மாணிக்கம்.

1. மாறுபடாமல்.

## மெய்ஞ்ஞானத்தின் கொலுவிருக்கையில்

# அஜ்ஞானத்தின் வழக்கீடு.

---

எனது தம்பியாயினும் தலைவரவர்களே! பிள்ளைகளாயினும் பெரியோர்களே! தலைக்கு மிஞ்சிய தம்பி*க்கும், கைக்கு மிஞ்சிய பிள்ளைக†ளுக்கும் பணியவேண்டிய முறைப்படி பணிகின்றேன்: என் பணிவை யோம்புவீர்களாக!

இப்போது நமது தலைவராகிய மெய்ஞ்ஞானத்திற்கு யான் தமையனென்பதும், உங்களுக்கு யான் மூதாதை§ யென்பதும், எல்லோருக்கும் நன்றாகத் தெரியுமானாலும், இவ்வஜ்ஞானத்தையா உறவு கொண்டாடுவதெனக் கூசி, வெளிப்படையாக ஒப்புக்கொள்ள மாட்டீர்கள். ஒப்புக்கொள்ளாமை மாத்திரமா? இங்கே பேசவந்திருப்பது அஜ்ஞான மல்லவேயல்ல வென்றுகூட பச்சைப் பொய்யும் சொல்லத்துணிவீர்கள்! ஆயினும், அது இயற்கையே யென்று யான் உங்களை மன்னிக்கின்றேன். எனது நண்பர் ஒரு ஐயர். அவர் தந்தை மடைத்தொழிலாள ராயினும் தன் பிள்ளையைப் படிப்பித்து—அருமறையன்று, ஆங்கிலம் படிப்பித்து—மகன் டெப்புட்டி தாசில்தார் எனகிற ஓர் சிறிய நாட்டாண்மை வேலைக்கு வரவே, தானும் அவரோ டுடனுறைந்து வந்தனர். யான் இந்நண்பரில்ல மோர்முறை சென்ற போழ்து, கால்நடையிலும் கைவீச்சிலும் வீட்டுத்தலைவர் போன்றும், உடையொழுங்கிற் றாழ்ந்தும் தோன்றிய அவரை யின்னாரென வறிய விரும்பி, எனது நண்பரை நோக்கி, 'யாரிப்பேர்வழி?' யென்று வினவ, எனது நண்பர், அவர் தன் மடைத்தொழிலாள (He is my cook) ரென்று ஆங்கிலத்திற் புகன்றனர். அவ்வளவுவரை

* அண்ணன் பேசசுக் கேளாது நடக்கும் தம்பி.

† பிரம்படிப் பருவந் தாண்டிய பிள்ளைகள்.

‡ மெய்ஞ்ஞானத்திற்கு அஜ்ஞானம் முற்பட்டதாகையால்.

§ எல்லோரும் அஜ்ஞானத்திருந்தே பிறக்கவேண்டியிருததலின்

ஆங்கிலத்தின் பொருளை நடபததி லுணர்ந்த தந்தை, சினமுகத்தோ டென்னை நோக்கி, 'ஐயா, நான் அடுப்புக்கோலி நெருப்பு மூட்டிய மனை வேறு; சமைத்த கறி கற்றறி மோளையாகிய இந்தப் பையல்தான்.' என்றனர். ஆகலின், வெளிப் பகட்டு உட்பகட்டு ஒன்றேனுமில்லா இவ்வஜ்ஞானத்தையா நீங்கள் உங்கள் மூதாதை யென்றும், தலைவர் தம் தமைப னென்றும், ஒப்புக்கொள்ளப் போகி றீர்கள்? இல்லவே யில்லை. ஆனாலும், என் குடியில் வாழையடி வாழையென வந்த உங்கள் திருக்கூட்டத்திற்கு யான்தான் மூதாதை யென்பதை யான் நிலை நாட்டாமலோ விடுவேன்? விட்டேனேல் யான் அஜ்ஞானமல்லே னாயிடு வேனன்றோ?

அன்றியும், 'நீ அநதக் காலங்கண்ட அஜ்ஞானம் அலலவே யல்ல. அவன் ஆங்கில வாட்சி வநத நாள முதல் எங்களூரை விட்டு ஓடிவிட்டான்.* எங்கெங்கோ கெட்டலைந்து கேடுகெட்டு, நான்காண்டுகளுக்கு முன்னே ருஷியா வுக்குச் சென்று உதையுண்டான்; பின் ஜெர்மனி, துருக்கி சென்று பின்னும் உதையுண்டான்†. இப்போது அந்த அஜ்ஞானம் ஆப்கானிஸ்தானத்திலிருக் கிறு‡னென்று கேள்வி. இங்கே நீ யாரோ வேற்றாள்; அஜ்ஞானமென்று பொய்ப் பெயர் புனைந்து வந்து நிற்கின்றனை, போ போ.' என்றுகூடச் சொல்லிவிடுவீர் கள். ஏனெனில், மூத்த முறையில் என் பிறப்புரிமையாகிய பட்டத்தை, யான் சற்றுக் கண்ணயர்ந்தது பார்த்து, நீங்கள் ஒன்றுபட்டு, மோசஞ்செய்து கவர்ந்து என் தம்பியாகிய மெய்ஜ்ஞானத்திற்குக் கொடுத்தீர்களன்றோ? அதனாற்றான், என்னை யானல்லவென்று இப்போது புறட்டுப் பேசுகின்றீர்கள். உங்களுக்கு இந்தப் புல்லறிவு புகட்டியது இன்னாரென்பது எனக்கு நன்றாகத் தெரியும். எனக்கா உங்களால் மறைக்கக்கூடும்! ஆரிய நாட்டில் அண்ணன் இராமன் பட்டத்தைக் கவர்ந்து, தம்பி பரதனுக்கு அளித்த தயரத கைகேயிகளும், அதற் குப் பழிவாங்க இரண்டண்ணன்மார்கள், வாலி இராவணர், பட்டங்களைப் பிடுங் கித் தம்பியர் சுக்கிரீவ வீடணர்களுக்கு அளித்த இராமனும், உங்களுக்கு

* ஆங்கில ஆட்சியால் அஜ்ஞானம் ஒழிந்ததென்பது.

† ஐரோப்பியப் போரில் அஜ்ஞானதசால் நுழைந்து முட்டுப்பட்ட நாட்டவர்களைச சுட்டுகின்றது.

‡ இக்கட்டுரை எழுதியகாலத்தில் ஆப்கானியர்கள் போரில் தலையிட முயன்றிருந் தனர்.

இத்தகாத வறிவு புகட்டியுள்ளனர். ஆனால் அந்த இராமப் பேதையைப்போல என்னைத் துரத்திவிடவா உங்களால் முடியும்! அந்த வாலி யிராவணப் பூச்சிகளைப்போல இந்த அஞ்ஞானத்தை நசுக்கவா உங்களால் முடியும்! நானே என் பட்டத்தைத் தம்பி மெய்ஞ்ஞானத்திடத்து உள்ளக் கனிவால் சற்று விட்டுக் கொடுத்தால் கொடுப்பேனே யல்லாது, வலுக்கட்டாயத்தால் நீங்கள் மோசஞ் செய்து கவர்ந்து கொடுக்க ஒருக்காலும் ஒருப்படவே மாட்டேன்.

என் மூதுரிமையை எவ்வாறு புறக்கணிக்கத் துணிந்தீர்கள்? எவ்வாறு மறந்தீர்கள்? நீங்களெல்லோரும் இவ்வஞ்ஞானத்தோடு பிறந்தீர்களா அல்லது மெய்ஞ்ஞானத்தோடு பிறந்தீர்களா? சொல்லுங்கள். உங்களிடத்தில் மெய்ஞ்ஞானம் எப்போது வந்தான்? எனக்கு நீண்ட நாளைக்குப் பின்னரன்றோ? அப்படிப் பின் வந்ததுமன்றி, பெரும்பான்மை நீங்கள் என்னோடு தானே பழகி வருகின்றீர்கள்? நான் உங்களோடு பழகியதில் மாத்திரமா மூத்தவன்? இந்த வையம் உண்டானபோது உடனொக்க விருந்தது நானா? அல்லது இப்போது கிளம்பிய விந்த மெய்ஞ்ஞானமா? நீங்களே கடவுளாணைக்கு அஞ்சிச் சொல்லுங்கள் பார்ப்போம். மெய்ஞ்ஞானமோ முந்தா நாளையச் சிறுவன். நீடித்து என்னைப் போல வாழ்பவனு மன்று. இத்தகைய நீர்க்குமிழி போன்ற இச்சிறுவனைக் கோரி ஏன் தவறிழைத்தீர்கள்?

௫. இருக்கட்டும், உங்களுக்குப் புல்லறிவு புகட்டிய **தயரதன்**, **கைகேயி**, **இராமன்** ஆகிய மூவர்களும் கேட்போர் கேள்விக்கு மறுமொழி புகலவாவது சில பொற்றற் பொருட்களை யீட்டி வைத்திருந்தனர். உங்களுக்கு அத்தகையனவும் கிடையாவே. அந்தோ! **சுக்கிரீவன்** மனைவியை அவனண்ணன் கவர்ந்தன னென வோர் குற்றங் கூறுவர். அவ்வாறு மெய்ஞ்ஞானத்திற்கு இழப்பதற்குக் கூட மனைவி மக்களுங் கிடையாரே! தம்பி **வீடணன்** நன்னெறியாளனென்று பட்டங் கொடுத்த தென்பர். அவ்வாறே தம்பி **பரதனும்** நன்னெறியாளனென்பர். பட்டம் தன் மகனைவிட்டுப் பிறழ்ந்து **பரதனுக்குப்** போயதென்ப துணர்ந்த **கோசலையும்**,

முறைமை யன்றென்ப தொன்றுண்டு மும்மையின்
நிறைகுணத்தவ னின்னினு நல்லனால்.'

கம்பராமாயணம.

அதாவது, 'மூத்தோனிருக்க இளையோன் பட்டந்தாங்குவது முறைமையல்ல வென்பது இவ்வையத்து நெறியொழுங்கில் உண்டு; ஆனாலும், உன்னைவிடப் பரதன் நிறை குணத்தவன், நல்லவன்.' என்று சொல்லிக் கோசலை தேற்றித் தேறினள். அவ்வாறு தேறுவதற்கேனும் இம்மெய்ஞ்ஞானத்திற்கு ஏதேனும் நன்னெறி நற்றன்மை மருந்திற்கு முண்டா? ஐயோ! கெட்டீர்! இம்மெய்ஞ் ஞானத்தின் பொறுக்கலாற்றாக் கொடுந்தன்மையைக் கேளுங்கள்! கேளுங்கள்! என்னருமந்த செல்வர்களே!

சு. இந்த மெய்ஞ்ஞானத்திற்குக் குழவிகளையும் கிழவர்களையும் கண்டால் பிடிக்கவே பிடிக்காது*. ஆணானாலுஞ்சரி, பெண்ணானாலுஞ்சரி, அவர்கள் மழலைப்பருவங் கடந்து வளர்ந்து திரளத் திரளவே அவர்களிடம் மெய்ஞ்ஞானம் சிறுகச் சிறுக நண்பு பாராட்டுவன். கிழமாகவாக இம்மெய்ஞ்ஞானம் சொல்லாமல் நழுவிவிடப் பார்ப்பன். பழைய வுறவால் கிழங்கள் இவனை இறுகப் புல்லினும், நாளடைவில் விட்டோடிப் போகின்றனன். உங்கள் பிறப்பிலிருந்து இறப்புவரையிலும், அவ்வாறே பிறப்புகள் தோறும், உங்கள் இளமை முதுமை ஆண்பால் பெண்பால் என்பன போன்ற உடன்பாட் டெதிர்மறைத் தன்மைகளை வேற்றுமைப் படுத்திப் பாராது, ஓரமின்றி, உள்ளன்போடு, உங்களுடைய நன்மைக்குந் தீமைக்கும், இன்பத்திற்கும் துன்பத்திற்கும், உங்களோ டிடைவிடாது கூடவிருந்து உழல்வது யானேயன்றோ?

எ. இந்த மெய்ஞ்ஞானத்திற்குச் செய்ந்நன்றி கொல்வதே பிறவித்தன்மை. என தேழைச் செல்வர்காள்! ஏமாந்தீர்கள்! ஏமாந்தீர்கள்! புறப்பகட்டுக் கண்டு ஏமாந்தீர்கள்! நீங்கள் பள்ளிக்கூடங்களில் இந்த மெய்ஞ்ஞானத்திற்கு எவ்வளவு பணங்கொடுத்து உடலுழைத்து அவன் விருப்பம் போனபடி யெல்லாம் நடந்து கதறினீர்கள்? அதற்கெல்லாம் உங்களுக்குக் கைக்கு மெய்யாகக் கிடைத்தது என்ன? பிரம்படி, மணையேற்றம், அண்ணாந்தாள், திட்டு, குட்டு, மொட்டு, திருகு, கிள்ளு, அடி, உதை, துறத்து, வெருட்டு†! ஐயோ! பேதைமை!

* சிறுவர்களுக்கு மெய்ஞ்ஞானம் வருவதற்குக் காலம் செல்கிறபடியாலும், கிழவர்களுக்கு மெய்ஞ்ஞானம் குறைந்துபோகின்றபடியாலும் இவ்வாறு உவமப்படுத்தலாயிற்று.

† பண்டைத் திண்ணைப் பள்ளிக்கூடங்களில் இத்தகைய பலவித ஒறுத்தல்கள் நடந்துவந்தன. ஆங்கில ஆட்சியில் இவைகள் தடுக்கப்பட்டிருக்கின்றன.

பேதைமை! அத்தனையும் பொறுத்து நீங்கள் பெற்றுக்கொண்டும், உங்களில் மிகுதியாகப் பெற்றவர்களிடத்தே இம்மெய்ஞ்ஞானம் வரவே மாட்டேனென்று உதறிவிட்டனன். சிறுபான்மையோரிடத்து வரப்போக விருந்தானாலும்,— ஐயோ! என்னென்று சொல்வேன்! நினைக்க வயிற்றெரிச்சல் கொள்கின்றது— என் னருமந்த பிள்ளைகாள்! உங்களுக்குச் சின மூளும்படி ஒருவன் அறைந்து விடுவானானால், அத்தருவாயில் இம்மெய்ஞ்ஞானம் உங்களை நட்டாற்றிற் கவிழ்த்து விட்டு இருந்த விடந் தெரியாமல் ஓடிவிடுகிறான். நான்றான் உடனே வந்து உங்களுக்கு உதவியாக நிற்கின்றேன். உங்களுக்குத் துணுக்குறும்படியான ஓரிடுக்கண் நேர்ந்தால், அப்போதும் இம்மெய்ஞ்ஞானம் சொல்லாமல் ஓடிவிடுகிறான். அப்போதும் நீங்களெற்குத் தவறாற்றியனவெல்லாம் பொறுத்து, நான்றான் உங்களுடனிருந்து நலந்தீங்கெல்லாம் உடனுகர்பவன். இம்மாதிரியாகத் தக்க வேளைகளில் உங்களை மோசஞ்செய்து விட்டோடும் மண்குதிரையைப் போன்ற இம்மெய்ஞ்ஞானத்தை எனைப்பா சேரினீர்கள்?

அ. இந்த மெய்ஞ்ஞானத்திற்கு எப்போதும் உண்ட வீட்டிற்கு இரண்டகம் செய்வதே தொழில். இவன் உண்டாம்போது ஒரு கொழுக்கட்டை போல உருவமுங் கிடையாது*; குந்தக் குடிசை கிடையாது; ஒதுங்கப் புறந் திண்ணை கிடையாது; கட்டத் துணி கிடையாது; உண்ணச் சோறு கிடையாது. ஒன்றுமில்லா வறுமையே இவனுடன் கொண்டுவந்த செல்வம். தம்பியென்றிளகிக், கால் நிறுத்திக், கட்டமைத்து, வாயில் பலகணிகளமைத்து, நீர் கழிக்க வழி, காற்றுடவழி, முதலானவையும் அமைத்து, ஓடு மேய்ந்து, கடப்பை மாடியில் கீரை முளைவிப்பதுபோல†, வெப்பந் தாக்காதபடி சம்பு போலக் கூரை வளர்த்தி, உங்களெதிரே யிருக்கும் இவ்விடுதி‡ யொன்று

* ஆன்மாவிற்கு மலவாசனை அதாவது அஜ்ஞானசம்பந்தம் இல்லாதவரையில் உடல் கிடையாதாகையாலும், வினைப்போகமே உருவெடுத்து நுகரும் போகமானபடியாலும். மெய்ஞ்ஞானத்திற்கு உரு முதலிய கிடையாவெனல்.

† கடப்பையென்னும் ஊரில் மாடிவீடுகள் கட்டும்வகை, சுவர்களின்மீது மரச் சட்டங்களைப் பரப்பி, அவைகளின்மீது மூங்கிற்றட்டிகளை யிட்டு, மேலே சவட்டுமண் ஒரு முழ உயரத்திற்குக் கொட்டிக், கீரைவிதைத்து வைப்பது. இது வெப்பம் தாக்காத படிக்குச் செய்வது.

‡ உடலையே ஓர் கட்டிடமாக விவரிக்கப்படுகிறது.

அணுவிற்குள்ளே யாண்டுநிற்ப தின்னதெனத் தெரியுமா? தெரியாது.

இவ்வையம் உண்டாகுமுன் என்னவிருந்தது தெரியுமா? தெரியாது.

இவ்வையத்திற்குப்பின் என்னவிருக்குந் தெரியுமா? ... தெரியாது.

இவ்வையம் என்னவாய்க்கொண்டுபோகின்றது தெரியுமா? தெரியாது.

நீங்கள் முன் என்னவா யிருந்தீர்கள் தெரியுமா? ... தெரியாது.

நீங்கள் பின் என்ன வாவீர்கள் தெரியுமா? ... ... தெரியாது.

கடவுள்யார் திண்ணமாகத் தெரியுமா? ... ... தெரியாது.

பிரமம் என்பது எப்படியிருக்குந் தெரியுமா? ... ... தெரியாது.

எங்கு மிருப்ப தின்னதெனத் தெரியுமா? ... ... தெரியாது.

எங்கு மில்லாத தின்னதெனத் தெரியுமா? ... ... தெரியாது

மெய்ஜ்ஞானத்தின் புறத் திருமேனிக்குள்ளே என்னென்ன விருக்கின்றன வெனத் திண்ணமாகத் தெரியுமா? ... தெரியாது.

நுங்கள் யாவர்க்கும் ஒரு பொதுப்பெயர் வைத்திருக்கிறேன் தெரியுமா? ... ... தெரியாது.

எனக்கு நீங்களெல்லோருஞ் சேர்ந்து ஒரு சிறப்புப் பெயர் தூய்ந்தமிழில் புதிதென நினைந்து பண்டையதை வைத்திருக்கின்றீர்கள் தெரியுமா? ... ... தெரியாது.

இந்தக் கேள்விகள் எல்லாம் ஏன்கேட்டேன் தெரியுமா? ... தெரியாது.

* இந்த உடைக்குள் இருப்பது யார் தெரியுமா? ... அஜ்ஞான மென்கிற தாங்கள்தான்.

ஆம், ஆம். நீங்களெல்லோரும் இந்த அஜ்ஞானத்தினுடைய சொக்குப் பொடியில் மயங்கி, உங்களையும் அறியாது உண்மையே பேசிவிட்டீர்கள்.

௰௧. அஜ்ஞானம் என்பது ஆரியர்கள் என்னைச் சுட்டிச் சொல்லுகின்ற பெயர். அதற்குத் தூய்ந்தமிழில் தகுதியாகத் 'தேரியாது' என்று எனக்குப் பெயர் வைத்தீர்கள். என் பெயர் 'தேரியாது' என்பதுதான். இந்தத் 'தேரியாது' என்கிற அஜ்ஞானம், எங்கெங்கே, எவ்வெப்போது, எவ்வெப்படி இருக்கின்றதெனை ஒப்புக்கொண்டீர்கள்; இப்போது நினைத்துப் பாருங்கள். என் கையி லிருப்பதும், என் சட்டைப்பையி லிருப்பதும், என்னுள்ளத் துள் ளிருப்பதும், என்னுடற்குள் ளிருப்பதும், உங்களுள்ளே யிருப்பதும், இவ்

இது சொற்பொழிவாளர் தன்னையே சுட்டிக் காட்டிக் கேட்டது.

வையத்துள்ளே யிருப்பதும், இவ்வையத்தின் புறம்பே நிற்பதும், அணுவிற்குள்ளே யாண்டுநிற்பதும், இவ்வையமுண்டாகுமுன் இருந்ததும், இவ்வையத்திற்குப் பின்னிருக்கப்போவதும், நீங்களிதற்கு முன்னிருந்ததும், இனி யிருக்கப்போவதும், கடவுளும்,பிரமமும், எங்குமுள்ளதும், எங்குமில்லாததும், நங்கள் பொதுப்பெயரும், எனது சிறப்புப்பெயரும், இந்தக்கேள்விகளும் உட்படத் 'தெரியாது' என்கிற அஜ்ஞாநமே யென்று நீங்கள் ஒப்புக்கொண்டதும் போதாமல், மெய்ஜ்ஞாநத்தின் புறத்திருமேனி தப்ப உள்ளிருப்பதும் 'தெரியாது' என்கிற அஜ்ஞாநமே யென்றும் ஒப்பினீர்கள். இந்த உடைக்குள் ளிருப்பது அஜ்ஞாந மென்கிற யானென்பதையும் ஒப்பினீர்கள்.

௰௨. உங்களுக்குத்தான் தானுகவுணரு மாற்றலிலதேனும், நாமகள் பிறப்பாகப் போற்றப்படும் ஒளவைக் கிழவியாரே நாமகள் கூற்றாகக்கூறிய,

> 'கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென்
> றுற்ற கலைமடந்தை யோதுகிறாள்—சற்றும்
> வெறும்பந் தயங்கூற வேண்டாம் புலவீர்
> எறும்புந்தன் கையாலெண் சாண்.'

என்பதையாவது படித்துணருங்கள். இங்கே 'கற்றது' என்றது மெய்ஜ்ஞாநத்தை; 'கல்லாதது' என்றது என்னை—அஜ்ஞாநத்தை. அவள் நன்கெடுத்துக் காட்டியவண்ணம், மெய்ஜ்ஞாநம் உங்கள் கையிலெடுத்துப் பாராட்டிய மண்ணுங்கட்டிக்கு ஒப்பு. யானோ இவ்வுலகிற்கு ஒப்பு. அந்த மண்ணுங்கட்டிதான் என்ன? என்னைவிட வேறு? இல்லை, நீங்கள் தடுமாறி அம் மண்ணுங்கட்டியை நழுவ விடுவீர்களானல், அது மறுபடியும் என்னோடு (அஜ்ஞாநத்தோடு) கலந்து இரண்டற்றுவிடும். இந்த ஒப்புமையிலுங்கூடப் பாருங்கள்; இம் மெய்ஜ்ஞாநத்தின் தீத்தன்மையை நன்கு புலப்படுத்தி யிருக்கின்றனள். அந்த மண்ணுங்கட்டியை நீங்கள் தான் தாங்கவேண்டும்; நீஙகள் தாங்கிநிற்கும் வரையில் மெய்ஜ்ஞாநமாக விளங்கும். தடுமாறிக் கீழே விட்டீர்களோ, அது மறைந்து போச்சுது. யானோ அப்படியல்ல; அசையாநிலையதாகிய வையகமாகவிருந்து உங்களையுந் தாங்கி, விழுந்த மண்ணுங்கட்டியையும் தாங்கி நிற்பவன். இவ்வாறு முக்காலத்திலும், மூவிடத்திலும், கடவுளும், பிரமமும், எல்லாம் யானுகவுள்ள அஜ்ஞாநத்தைவிடுத்து, நீர்க்குமிழிபோன்று, நற்குடிப் பிறப்பின்றி, நற்றன்மையின்றி,

புறத்திருமேனிவரையில் வேறாகத் தோன்றிய இம் மெய்ஞ்ஞானத்தை எம்மாட்சி கண்டு தெரிந்தெடுத்தீர்கள் ?

௰௩. இம்மெய்ஞ்ஞானம், என் செல்வாக்கைக் கண்டு, ஆற்றாமைகொண்டு, 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்று தருக்குகிற மாயாவாதியென்று என்னை இழித்துக் கூறியும்; சிவம், சத்தி, மாயை அல்லது பதி, பசு, பாசம் என்கின்ற முப்பொருள்களென்றுமுள்ளன வென்று புகன்றும், உங்களை ஏமாற்றித் தன் கைக்குட் போட்டுக்கொண்டனன் போலும். நீங்கள் பல்லாண்டுகளாக ஆண்டானடிமைத் திறத்திலேயே ஒழுகி வந்தவர்களாதலின்,

'பழக்கங் கொடியதுபார் பாறையினுங் கோழி
கிழிக்கும் பொலியைக் கிளறும்.

என்றவாங்கு, உங்கள் பழக்கக் கேட்டால் ஆண்டான் வேறு, அடிமை வேறு, என்று ஏற்றுக்கொண்டீர்கள். ஆண்டானையும் அடிமையையும் உள்ளிருந்தாட்டும், ஆட்டுவிக்கும் அஜ்ஞானம் இருக்கிறே னென்பது அஜ்ஞானத்தினால் மறந்தனிர். யான் உள்ளே புகாவிடின் உங்கள் சிவன்றான் கூத்தாடுவானோ? அவன் கூத்தாடாவிடின், நீ, நான், அவன், என்கின்றவேற்றுமை யுணர்ச்சியோடு இவ்விடம் குழுமியிருப்பீர்களா? நன்றாக வுன்னிப் பாருங்கள். உங்கள் மெய்ஞ்ஞானத்தையே கேளுங்கள், என்னருமந்த செல்வர்களே !

௰௪. இந்த மெய்ஞ்ஞானத்திற்கு என்னை நீங்கிப் பேசவே நாவெழாது; நடக்கக் காலெழாது; ஒரு வேலைக்கு முதவான். அதெல்லாம் என் வன்மைக்குச்சான்று.

'மாயையை யகன்று னடக்கக் காலெழுமோ
வாயிடை மாற்றமொன் றுண்டோ
போயொரு விடய முணமனம் வருமோ
பொருந்துறும் பகலிர வுளவோ.'†

என்ற வுண்மையையும் ஒப்புக்கொள்வன். ஆயினுங், தற்சிறப்புவேண்டி, 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்பதை மறுத்து, முப்பொருளுண்டென்பன். அவற்றுள் பாசம், மாயை என்கின்ற இழிபெயர் கொடுத்து மறைத்து, என்னை

---

ஒழிவிலொடுக்கம், † பிரபுலிங்கலீலை,

மூன்றிலொன்முகச் சொல்வன். இம் மெய்ஞ்ஞானத்தை வற்புறுத்திக் கேளுங்கள். அந்தப் பசு என்கின்ற சக்திக்கு என்னை நீங்கி நிற்கச் சக்தியுண்டா? இச்சக்தியில்லாததைச் சக்தி* யென்றது முரணென்னும் பாவமுகு போலும்! அந்தப் பதி யென்கின்ற சிவன்முன் நான் புகாவிடின் கூத்தாடுவானா? என்ன போங்கள். இதெல்லாம் கேட்டும் உணர்ந்தும், ஒப்பற்றவென் செல்வாக்கை மறந்து, இருக்குமிடந் தெரியாதிருந்த மெய்ஞ்ஞானத்தின் முப்பொருட் புரட்டுக்கு வீணாக வாளாயினீர்.

௰௫. 'சர்வம் ப்ரஹ்மமயம்' என்பதும் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்பதும் உங்களுக்குத் தெளிவாக விளங்காவிட்டாலும், பொருள்படாச் சொற்களையகற்றி, அவைகளுக் கிணையான பொருள்படுஞ் சொற்களையமைத்து ஓதுவீர்களானால், உங்களுக்குச் சுயானுபவம் என்கின்ற தற்காட்சி வந்துவிடும். பிரமம் என்றால் என்னவென்று யான் கேட்டபோது சரியாகவே விடையளித்தீர்கள்; அதாவது 'தெரியாது' என்று சொன்னீர்கள். 'தெரியாது' என்றால் நான். அதாவது அஞ்ஞானம் என்று உங்களுக்குத் தெரியும். இப்போது 'ப்ரஹ்மம்' என்பதற்குப் படியாகத் 'தெரியாது' அதாவது 'அஞ்ஞானம்' என்பதையமைத்து ஓதிப்பாருங்கள். 'சர்வம் ப்ரஹ்ம மயம்' என்பதும், 'சர்வம் அஞ்ஞான மயம்' என்பதும் ஒன்றே. அவ்வாறே 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்பதும், 'அஹம் அஞ்ஞானாஸ்மி' என்பதும் ஒன்றே. இப்போது உங்களுக்குத் தற்காட்சி வந்துவிட்டது; ஐயமேயில்லை.

அஹம் ப்ரஹ்மாஸ்மி
அஹம் அஜ்ஞானாஸ்மி
ப்ரஹ்மோஹம் அஜ்ஞானாஸ்மி
அஜ்ஞானோஹம் ப்ரஹ்மாஸ்மி

எனபனவெல்லாம் ஒருண்மையையே குறிப்பன. அஞ்ஞானத்தினுடைய செலவாக்கை விரிவாக வெளிப்புக்கொண்ட நீங்கள், மேற்சொன்னவுண்மையைக் கண்கூடாகக் காணவினி யென்னதடை? இப்போதேனும் மெய்ஞ்ஞானத்தின் முப்பொருட் புரட்டைச் செவ்வனே யறிந்து, தவமொழுக்கிற்கு வருந்தீரோ? அஜ்ஞானோஹம்பாவனை செய்யாமலே, என்னோடிரண்டற்றிருக்கும் நீவிர்,

* சக்தி யென்றது ஆன்ம சக்தியை.

சிவோஹம்பாவனை செய்து, சிவமென்ற என்னொரு பிள்ளையோடு இரண்டற்றி ருந்தனிர் யாவர்? கையைத்தூக்குங்கள் பார்ப்போம். வெளிநீறு பூசி வியர்வை நாற்றம் போக்குவதையன்றி, உள் நீறு பூசி உயிர் நாற்றம் போக்கியோர் யார்? கையைத் தூக்குங்கள்.

௰௬ செல்வாக்கிருக்கட்டும். மெய்ஞ்ஞானத்தின் வடிவழகைக் கண்டு வாயங்காந்தீர்களா? கட்டழகைக்கண்டு கண்கூசி மருண்டீர்களா? அழகென்ப தெல்லாம் எனக்கும், என்வழிவந்த திருக்கூட்டங்களுக்குமே உள்ளது, உரியது இம் மெய்ஞ்ஞானம் என்னோடு ஏட்டிக்குப் போட்டிபோட்டு; தகிடிக்குத் திகிடி செய்து, அழகென்பது சற்றுமில்லா திழந்து, அதன் எதிர்மறை அதாவது இழிவடிவையே தனதாக்கிக்கொண்டனன். எந்நாட்டுப் பாவலரும் எழிலென வுணர்ந்து பாடிக் களித்தது, என் வழிவழி வந்த அஞ்ஞானச் செல்வங்களான தலைகாலின்றிய மலையையோ? போக்கின்றி யலைமோதும் கடலையோ? ஒன்று மின்றி யூக்குவிக்கும் வானையோ? கண் மண் தெரியாது கண்டபடி வீசுங் காற்றையோ? தனக்குத்தானே வலஞ்செய்துழலும் நிலவைப்பையோ? புணர்ந் தோர்க் கமிழ்தும் பிரிந்தோர்க் கழலுமாய திங்களையோ? உழைக்கப் பிழைக்க வூக்கி யெழும்பும் காலைக் கதிரவனையோ? துய்க்க வுறங்க விட்டுச் செல்லும் மாலைக் கதிரவனையோ? வானின்று வழங்கு மெழிலியையோ? சூல் கொண்ட இப்பியையோ? மால் கொண்ட களிற்றையோ? தலை கீழாக வுடல் மேலாக உண்டு வாழும் புல் பூடுகளையோ? கீழ்நோக்கி விலங்கி வாழும் விலங்கினத்தை யோ? பாடியது. வேறெவற்றைச் செப்புங்கள்! இயற்கையழகு அஞ்ஞானக் களஞ்சியமாகிய மேற்கூறியவற்றிற்றான் உளதெனப் பன்னாட்டுப் பாவலரும் ஒப்பியுள்ளனர். நமதிந்தியப் பெரும் புலவர் இரவீந்த்ர நாதரும், மெய்ஞ்ஞானத் தின் உறவு கொண்டாடக் கூடிய மக்கட்பிறப்பினர் இருந்து வாழும் நகரப் பக்கம் கூடாதென வொழித்து, அஞ்ஞானத் திருக்கூட்டங்கள் வாழும் காட் டகத்தினன்றோ தன் கல்லூரியை யமைத்தனர்!

௰௭. மக்கட் பகுதியிலும் பெண்பாலா அழகை எந்நாட்டுப் பாவல்ல வரும் புனைந்துரைத்திருக்கின்றனரே யென்று எனக்கு மறுப்புப் பேச முன் னிடுவீரேல், எனது கட்சியையே முற்றிலும் நிலைநாட்டினீராவீர். எறும்பி கள் நற்றீனியென்றேமாற்றமடையச் செழுந்தழை பரப்பி, அவ்வெறும்பிகளைக்

குழியில் வீழ்த்திப் பிடிப்பது போல, மெய்ஞ்ஞானத்தைப் பிடிக்க வந்த வேட்டுவர்கள் இம்மாதரா ரென வறிகிலிர் போலும்!

'பெண்மை யென்பது பெரும் பேதைமைத்தே.' என்றும்,
'பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்

என்றும் வழங்கிவரும் மூதுரைகளைக் கருதிப்பார்ப்பிரேல், பேதைமை அதாவது அஜ்ஞானமே அவர்கள் உள்ளும் புறம்பு மென்பதும், அஜ்ஞானமே அவர்களுக் கணிகலனென்பதும், அதனாற்றானே அவர்கள் அழகில் மிஞ்சினார்களென்பதும், அவ்வஜ்ஞான மேலீட்டாற் பெற்ற வழகு கண்டே புலவரெல்லாம் அவர்கள் பாட்டே பாடி மகிழ்ந்தன ரென்பதும் நன்கு புலப்படும். அது பொருட்டே ஆங்கிலரும் பெண்பாலை அழகி லுயரிய பால் (Fairer sex) என்றனர்.

௰௮. மெய்ஞ்ஞானத்திற்கு அழகே யில்லை யென்பதற்கும், அழகெல்லாம் எனக்கும் என் வழிவந்தோர்க்குமே யுளள தென்பதற்கும், ஒத்துப்பாருங்கள்.

தாயுமானவன் தலையைப் பாடினானெவன்?
தையலாரின் தலையைப் பாடாதானெவன்?
இராமலிங்கத்தின் இடையைப் பாடினானெவன்?
இளமைப்பெண்ணின் இடையைப் பாடாதானெவன்?
தொல்காப்பியரின் தொடையைப் பாடினானெவன்?
தோகைமாரின் தொடையைப் பாடாதானெவன்?
அகத்தியர் முகத்தி னழகைப் பாடினானெவன்?
அணங்கனார் முகத்தி னழகைப் பாடாதானெவன்?

சற்று விடை பகருங்கள் பார்ப்போம்.

௰௯. மெய்ஞ்ஞானப் பொய்வடிவு பூண்டிருந்த அருணகிரியும், இராமலிங்கமும், பட்டினத்தடிகளும், இன்னும் பலரும் அஜ்ஞானப் பேரழகி லீடுபட்டுத் தாங்கமுடியாது, இகழ்வது போன்று பாசாங்குசெய்தும், உருவகம்போலப் பாசாங்குசெய்தும், பிறர் கண்மூடிப், பெண்ணழகிகளின் பேரெழிலையும் கலவியையுமே பாடிப் பாடிச் சிற்றின்பம், சிற்றின்பம், சிற்றின்பம், என்று பன்முறை சொல்லிச் சொல்லிப், பலதுளி பெருவெள்ள மென்பதற் கிணங்கப், பேரின்பமாக்கிக் கொண்டு வாழ்ந்திருந்தனரெனின், என்னழகி லீடுபடாதார் யாவர்?

இவர்கள் மெய்ஞ்ஞாநங்க ளென்றால் என்னைச் சற்று மறந்துதான் வேறு பாட்டுப் பாடலாகாதோ! அவர்கள் மெய்ஞ்ஞாநிக ளென்பதற்கும் என் பாட்டுத் தானா கிடைத்தது! வேறு என்னதான் கிடைக்கும்?

**தாயுமானவர்** பாட்டொன்று கேளுங்கள்.

‘தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலேசிற் றிடையிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த பொடியிலே யடியிலேமேற்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே புந்திதனை நுழையவிட்டு’

இதன்மேல் இனி நுழையவிடக்கூடாதெனப் பாடுகிறார்.

**இராமலிங்கர்** பாட்டொன்று கேளுங்கள்.

‘கண்ணுறங்கே னுறங்கினுமென் கணவரொடு கலக்குங்
கனவேகண் டுளமகிழ்வேன் கனவொன்றோ நனவும்
எண்ணடங்காப் பெருஞ்சோதி யென்னிறைவ ரெனையே
யிணைந்திரவு பகல்காணு தின்புறச்செய் கின்றார்
மண்ணுறங்கு மலையுறங்கு மலைகடலு முறங்கு
மற்றுளவெல் லாமுறங்கும் மாநிலத்தே நமது
பெண்ணுறங்கா ளெனத்தாயர் பேசிமகிழ் கின்றார்
பெண்களெலாங் கூசுகின்றார் பெருந்தவஞ் செய்திலரே.

இவருற்ற பேரின்பம் இருந்தவா வியப்பே வியப்பு!

**பட்டினத்தார்** பாட்டைக் கேளுங்கள்.

‘அஞ்சு வயதாகி விளையாடியே
உயர்தருஞான குருவுபதேச முந்தமிழின்கலை யுங்கரைகண்டு
வளர்பிறையென்று பலரும்விளம்ப வாழ்பதினாறு பிராயமும்வந்து
மயிர்முடிகோதி யறுபதநீல வண்டிமிர்தண்டொடை கொண்டைபுனை
மணிபொனிலங்கு பணிகளணிந்து மாகதர்போகதர் கூடிவணங்க
மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டு மருண்டுதிரண்டு
வரிவிழிகொண்டு சுழியவெறிந்து மாமயில்போலவர் போவதுகண்டு
மனதுபொறாம லவர்பிறகோடி மங்கலசெங்கல சந்திகழ்கொங்கை
மருவமுயங்கி யிதழமுதுண்டு தேடியமாமுதல் சேரவழங்கி

ஒருமுதலாகி முதுபொருளாயி'ருந்ததனங்களும் வம்பிலிழுந்து
மதனசுகந்த விதனமிதென்று வாலிபகோலமும் வேறுபிரிந்து
வளமையுமாறி யிளமையுமாறி வன்பல்விழுந்திரு கண்களிருண்டு
வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து வாதவிரோத குரோதமடைந்து
செங்கையினிலோர் தடியுமாகியே'

இதில் ஐந்து வயதிலிருந்து பதினாறு வயது வருவதற்கு ஒன்றரை வரியில் முடித்து, முத்தமிழின் கரை கண்டதெல்லாம் ஒரு பிடிக்கையில் முடித்துவிட்டு, என்னுடைய விளையாட்டிற்கு எட்டு வரி செலவிட்டு, நரை, திரை, செங்கையிலோர்தடி யுட்பட இரண்டு வரியில் முடித்துவிட்டனர். இதனால் இந்த மெய்ஞ் ஞானத்தின் போக்கு எதிலென்பதும, என்னுடைய செங்கோல் வலிமையும் விளங்கும்.

இன்னும் அருணகிரியார் பாடிய திருப்புக ழென்கிற திருவண்ண புகழைக் கேளுங்கள் :

'மலரணி கொண்டைச சொருக்கி லேயவள்
சொலுமொழி யின்பச செருக்கி லேகொடு
மையுமடர் நெஞ்சத் திருக்கி லேமுக—மதியாலே
மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொஙகைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத திடத்தி லேவிழி—வலையாலே
நிலவெறி யஙகக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செய்கைக் கிலுக்கு லேகன
நிதிபறி யந்தப் பிலுக்கி லேசெயு— மொயிலாலே
நிகமிய லுந்தூர்க் குணத்தி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
நிமிஷமி ணங்கிக் கணத்தி லேவெகு—மதிகேடாய்
அலையநி னைந்துற் பனத்தி லேயநு
தினமிகு மென்சொற் பனத்தி லேவர
வறிவும ழிந்தற் பனத்தி லேநித—முலைவேனோ?'

என்று சொல்லி உலைகின்றனர்.

அருக்கு மஙகையர் மலரடி வருடியுங்
கருத்த றிந்தபி னரைதனி லுடைதனை

யவிழ்த்து மங்குள வாசிலை தடவியு—மிருதோளுந்
றணைத்து மங்கையி னடிதொறு நகமெழ
வுதட்டை மென்றுப லிடுகுறி களுமிட
வடிக்க ளந்தனின் மயில்குயில் புறவென—மிகவாய்விட்
டுருக்கு மங்கியின் மெழுகென வுருகிய
சிரத்தை மிஞ்சிடு மனுபவ முறுபல
முறக்கை யின்கனி நிகரென விலகிய—முலைமேல்வீழ்ந்
துருக்க லங்கிமெ யுருகிட வமுதகு
பெருத்த வுந்தியின் முழுகிமெ யுணர்வற
வுழைத்திடுங்கன கலவியை மகிழ்வது—தவிர்வேனோ?'

என்று சொல்லிச் சொல்லி மனப்பால் குடிப்பதில் தவிர்தலிலர்.

இவர் 'சீச்சீ! வேண்டாம், வேண்டாம்.' என்று வெறுத்துத் துப்புகிற சித்ரத் தனத்திற்கு இவர் சொல்லுகிற வக்கணையைக் கேளுங்கள்.

கமல மொட்டைக் கட்ட ழித்துக் குமிழியை
நிலைகு லைத்துப் பொற்கு டத்தைத் தமனிய
கலச வர்க்கத்தைத் தகர்த்துக் குலையற—இளநீரைக்
கறுவி வட்டைப் பிற்று ரத்திப் பொருதப
சயம்வி ளைத்துச செப்ப டித்துக் குலவிய
கரிம ருப்பைப் புக்கொ டித்துத் திறல்மத—னபிஷேகம்
அமலர் நெற்றிக் கட்ட ழற்குட் பொடிசெய்து
அதிக சக்கரப் புட்ப றக்கக் கொடுமையி
னடல்படைத்தச் சப்ப டுத்திச் சபதமொ—டிருகாளம்
அறைதல் கற்பித் துப்பொ ருப்பைப் பரவிய
சிறக றுப்பித் துக்க திர்த்துப் புடைபடு
மபிந வச்சித் ரத்தன'மாம் !!!

௨௰. இன்னுஞ் சற்றுப் பொறுமையுடன் கேளுங்கள். அழகைப் பாடத்தேடியெடுத்த உருப்படிகள் யாவும் என்னினத்தின ரென்பது மட்டுமன்று. அவர்களிடத்து இம் மெய்ஜ்ஞானச் சார்பான கூறுபாடேதேனும் நேருபாடாக வமைந்திருப்பின், அக்கூறுபாடுகளை யக்கரையோடு விலக்கி, எனது சார்பான வற்றையே பாடிப்பாடிக் களித்தனர். மெய்ஜ்ஞானக் கருவிகள் தலையிடத்தும், அஜ்ஞானக் கருவிகள் உடலிடத்தும் உளவெனக் கேட்டிருப்பீர்கள். அஜ்ஞானப் பேரழகினளாய பெண்ணைப்பாடப்புகுந்த புலவன், அஜ்ஞானக்கருவிகள் திகழும்

உடற் பகுதியின் நுனிப் புறத்தைப் பிடித்துத் தொடங்கி, (பாதாதிகேசம்) தன் பாவன்மையிற் பெரும்பான்மையைக் கீழே செலவிட்டுக், கடைசியாக மெய்ஞ்ஞாநக் கருவிகளிருக்கு மிடமாகிய தலையைப் பாடவிரும்பினன். அவ்வாறு இறுதியிற் பாடவிடுத்த தலைப்பகுதியிலும், மெய்ஞ்ஞாநப் பாங்கான சட்டித்தலை, ஏறு நெற்றி, முனைநோக்குங்கண், என்பனவற்றையா அழகென்று கணக்கிட்டனன்? இன்று. இத்தகைய வுருவை இழிவடிவென்று வெட்டவெளியாகவே சொல்லி விட்டுத், தலையிடத்தனவேனும் எனது தொழிலை அங்கிருந்து நடத்தும் வெல்லுஞ் சொல், கொல்லுங் கண், வேட்கை நகை, குறுகிய நெற்றி, இருண்ட குழல், மருட்டும் பார்வை, கொவ்வை யிதழ் இவைகளையே பாராட்டிச் சீராட்டிப் பாடுவன். மெய்ஞ்ஞாநத்தின் சார்பு சிறிது மிகையாகத் தன் தீவினையாற் பெற்ற ஆண்பாலைத்தான் பாடப் புகுபவன், அங்கும் என் ஆட்சியை விளக்கும் வடிவு, தொழில்களையே உண்மையழகென வுணர்ந்து, முறுக்கு மீசை, விரிந்த மார்பு, மலைபோனற தோள், காளைபோன்ற நடை என்று பலவாறுகப் புகழ்வன்.

உக. அஜஞாநப் படையாளர்களாகிய பெண்பாலிற் றோன்றியோ ளாயினும், அப்படைத்தொழிலி லிழுத்து, உதவிச் சம்பளப் பெற்று, மெய்ஞ்ஞாநத்தை நாடிச்செல்லும் நரைமூதாட்டி பெண்பாலே யாயினும், அவளுடைய நரைத்த கூந்தலையும், திரைத்த நெற்றியையும், தொங்கு கன்னங்களையும், பிறவும் எப் புலவர் அக்கரையோடு அழகெனப் புனைந்து பாடினர்? பாடுகிறார்? பாடுவார்?

உஉ. நீங்கள் முதன் முக்கடவுளரென வணங்குகின்றீர்களே அவர்கள் தாம் எனக்கு முதற் பிள்ளைகள். அஜ்ஞாநம் என்கிற என் தொடக்கமின்றேல், அவர்கள் உருவாகியே யிராரென்பது உங்கள் மெய்ஞ்ஞாநத்தைக் கேட்டாலும் தெரியும். அம்மூவருள்ளும், திருமால்தான் என் பெயரெடுக்க வந்த அருமைத் திருப்பிள்ளை. அவனிடத்து எனக்கும், என்னிடத்து அவனுக்கும், தீராத அன்புண்டு. என் (அஜ்ஞாநத்தின்) ஆசைவடிவங்களான மீன், ஆமை, பன்றி, கோளரி ஆகிய வடிவங்க ளெடுத்து விளையாடி, தான் சற்றுந் துன்புறுது பகைவர்களைக் கிழித்தெறிந்தனன். அவனுங்கூட இம் மெய்ஞ்ஞாநத்தின் வடிவாகிய மக்கள் வடிவில் சிறிது மருண்டு, குள்ளன், கோதண்டராமன், பரசுராமன், பலராமன், கண்ணன் என்று தோன்றி, இம் மெய்ஞ்ஞாநத்தின் வடிவு

பூண்ட குற்றத்திற்காக, அவன் பகைவரை யடக்குமுன் தான்பட்டபா டளவில்லை. இது கண்டே, இனி இந்த மெய்ஞ்ஞானத்தினுடைய வடிவு கூடவே கூடாதெனஷூ வெறுத்துக், குதிரை வடிவிற் றோன்றவே தீர்மானித்திருக்கின்றனன். என் னருமந்த பிள்ளை திருமால்தான் எப்போதும் என் உள்ளத்திற் கிணங்கிய தொழிலேயே செய்து என்னகங் குளிர்விப்பவன். அவன் தோற்றங்கள் பத்திலும் செய்த செயல்கள், பாகுபாடு படுத்திப்பார்க்கின், இருவகையிலடங்கும். அதாவது, ஆண்களைக் குத்து, வெட்டு, அடி, பிடி, நசுக்கு, பிசுக்கு, வெல், கொல் என்பனபோன்றனவும்; பெண்களைக் குழுவு, தழுவு, இளகு, பழகு, விரும்பு, நெருங்கு, நிலவில் குலவு, வெளியில் உலவு என்பன போன்றனவுமே. இதனால் எனக்கிவன் எவ்வள வுகந்த பிள்ளை யென்பது தெரியும்.

உங. இன்னொருவன் **நான்முகன்** என்பானும் நல்ல பிள்ளைதான். என் போக்கறிந்து இடைவிடாது பிறப்பித்த வண்ணமா யிருக்கின்றனன். ஆனாலும் அவனிடத்துச் சிறிது எனக்கு வெறுப்புண்டு. ஏனெனின், ஒவ்வொரு வேளை தடுமாறிப்போய், இம் மெய்ஞ்ஞானம் போன்றவர்களை யுண்டாக்கிவிடுகிறான். அவர்களோடு நான் அக்கப்போர் கொடுக்கவேண்டி யிருக்கின்றது.

உச. எனது மூத்த பிள்ளை சிவனென்பான் ஒருவன்றான் குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக்காம்பு! அவனொரு பெரும் பித்தன். ஒன்றுந் தெரியாத அப்பாவி. 'மூத்தது மோளை இளையது காளை' யென்பது உங்களுக்குத் தெரியுமே. நீங்கள் இப்போது மெய்ஞ்ஞானத்தைத் தேடியதுபோல, முன்னோர்கால் உங்களைப்போன்ற நால்வர் மெய்ஞ்ஞானத்தைத் தேடினார்கள். அப்போது இச்சிவன், பித்தம் போனபோக்கில் வந்தவன், எங்கும் என்னாட்சி விளங்குவதைக் கண்டு வெருவி, மூச்சுவிட மாட்டாது, வாய் திறக்க மாட்டாது, கண்சிமிட்டமாட்டாது, உடலசைக்கமாட்டாது, தறியொப்பந்தமாகக் குந்தி, கண்ணை மேலே வெருள விழித்துக்,கோரணியாக வலது கையை வட்டப்படுத்தி மார்பிடத்தைக்காட்டி, இடது கையைப் பரப்பிவைத்துத் தொடையிடத்தைக் காட்டிவிட்டு, இருந்த இடந் தெரியாது போயினன்*. என்னுணையாற் பையிற்

* ஐம் பொறிகளைச் செலவிடுங்காலும் அஜ்ஞான மலங்களையே நுகர நேருகிறபடியால் ஐம்பொறிகளை யடக்கவேண்டி யோகாசனத் தமர்ந்த விதத்தைச் சொல்லுகின்றது.

கட்டுண்டு கிடக்கும் குழவியுருவை*த்தான் அவன் கைக்குறியாற் காட்டி, 'இவ்வஞ்ஞானத்தின் ஆட்சிக்குத்தான் இவ்வாறு எல்லோருங் கட்டுண்டு கிடக்க வேண்டும்; மூச்சு விடாதேயுங்கள்; வாய்திறவாதேயுங்கள். என்று குறித்துக் காட்டிப்போக, ஏதோ ஊமைக்குரு மெய்ஞ்ஞானத்தைக் காட்டிவிட்டானென்று சொல்லிக்கொண்டு சிலவர் இன்னுந் திரிகின்றனர். அந்நால்வரைப் போலத்தான் இம்மெய்ஞ்ஞானத்தின் கோரணி கண்டு மருளப்போகின்றீர்கள் போலும்.

௨௫. இதுகாறும் என்னுடையவும், என்வழிவழி வந்தோருடையவும் அழகைத்தான் அழகென்று முக்காலத்திலும் எப்பாவலரும் பாடுவதென்றேன். அதனை நீங்கள் மறுக்க வேலாதானும், அவ்வாறு பாடற் கேற்ற அழகுதான் என்ன; அதன் சிறந்த கூறுபாடுகள் என்னவென்று தெரிய விரும்பும் ஆவல் உங்களுக்கு மிகவும் இருக்குமல்லவா? அச்சிறப்புக் கூறுபாடுகளையும் சிறிது உங்களுக்குச் சொல்லுகிறேன். அதுகொண்டு நீங்கள் எங்கெங்கே இந்த மெய்ஞ்ஞானம் தன் கைவரிசையைச் செலுத்தியிருக்கிறான் என்றும், எவ்வெவ்வளவு தன் ஏமாற்றலை அரங்கேற்றி யிருக்கின்றானென்றும் கண்டுணர்ந்து, மெய்ஞ்ஞானம் அணுகாதபடி உங்களைக் காத்துக் கொள்ளவும் எளிதாகும். என் கட்டழகைச் சொல்லும்போது மெய்ஞ்ஞானத்தின் இழிவடிவையும் ஆங்காங்கே ஒப்பிட்டுக் காட்டவேண்டியு மிருக்கின்றது.

௨௬. முதல் வகுப்பு அஞ்ஞானச் செல்வங்களுக்குத் தலைவேறு உடல்வேறென்பது கிடையாது. வடிவு முழுவதும் பிறப்புக் கருவிகளே நிறைந்துள்ளன. இவைகளைத் தாதுப்பொருள்கள் என்று ஆரியர் சொல்வார்கள். தமிழில் சொல்லுமிடத்து, 'தலையிலிகள்' என்று சொல்லவேண்டும்.

௨௭. இரண்டாவது வகுப்பு அஞ்ஞானச் செல்வங்கள் தலை கீழாகவும், உடல் மேலாகவும், தலை முழுவதையும் மண்ணில் மறைத்துக்கொண்டு, உடல் முழுவதையும் புறத்தே காட்டிக் கொண்டு, தலையெல்லாம் வாயொன்றாகவே பெற்று, உடல் முழுதும் வயிறும் பிறப்புக் கருவியுமாகப் பெற்று, அவ்வயிற்றையும் பிறப்புறுப்புக்களையும் புறத்தே காட்டிக், கூசாமல் இருந்து

* இப்பொருள் ஈண்டு விரிக்கிற்பெருகும். வேண்டியோர் ஆசிரியர் வெளியிட்டுள்ள 'The Tamil Alphabet—Its Mystic Aspect' என்னும் நூலிற்கண்டுகொள்க.

அவற்றைக்கண்டு, பூத்திருக்கின்றது, காய்த்திருக்கின்றது, அழகழ [illegible]யாவரும் பார்க்க விரும்புவார்கள். இவற்றை ஆரியர் மூலம் என்று [illegible]வர். இவற்றைத் தமிழிற் சொல்லவேண்டின், 'தலைகீழன' என்னல் [illegible]டும்.

உஅ. மூன்றாவது வகுப்பு அஜ்ஞாநச் செல்வங்கள், தலையும் உடலும் சம மட்டத்தி லிருக்கப் பெற்று, நேர் நோக்கு முற்றப்பெறாதன. இவற்றுள் உயர்ந்த அஜ்ஞாநச் செல்வங்கள் நெருங்க நிலத்தைப் பார்ப்பன. குறைந்த அஜ்ஞாநச் செல்வங்கள் சிறிது நிலத்தை எட்டப் பார்ப்பன. இவைகளுக்குக் கண், காது, மூக்குண்டானாலும், அவைகள் அற்பத்தோடு, அந்த அற்பமும் அஜ்ஞாநத் தொழிற்கே செலுத்தப் படுவன. தலையில் பெரும்பகுதி வாயாகவே யுடையன. உடலிற் பெரும்பகுதி வயிறாகவும் பிறப்புறுப்பாகவும் உடையன. இவைகளையும் மக்களையும் உட்படுத்தி ஆரியர் ஜீவர் என்பர். தமிழிற் சொல்ல வேண்டின், 'கீழ்நோக்கிகள்' என்பது சாலும். இப்பெயர் மக்களையும பிரித்துவிடும்.

உகூ. நான்காவது வகுப்பு அஜ்ஞாநச் செல்வங்கள், தலை மேலும் உடல் கீழுமாகப் பெற்றன; நேர்நோக்குப் பெற்றன; கண், காது, மூக்குகள் பெற்று, அவைகளில் சிறிது இம் மெய்ஜ்ஞாநம் புகவிடுவன; அதனால் இன்னற்படுவன; மேற்றலை வீங்கி, வாயுறுப்புக் குறைந்து, வாய்க்குத் தின்னும் வேலை போதாது, ஒருவேளை உரிமையாய என்தொழிலையும், மற்றோர்வேளை இந்த மெய்ஜ்ஞாநத்தின் தொழிலையும் ஆற்றிக்கொண்டிருப்பன; உடலில் வயிறுங் குறைந்து, பிறப்புறுப்புக்களுங் குன்றி, இன்பங்களெல்லாங் கெட்டுத், துன்பம் மிகுந்துள்ளன. இவைகளை ஆரியர் நரன் என்பர். தமிழிற் சொல்லவேண்டின் 'நேர் நோக்கிகள் என்னலாம்.

௩௰. இதெல்லாம கழிந்ததுதான் இழிவடிவான மெய்ஜ்ஞாந வகுப்பு. இவ்வகுப்பு இயற்கையில் உண்டாவதில்லை. ஏனெனில், இயற்கை என்னை யன்றி யில்லையாகலின், அழகு பொருந்தித்தான் பிறப்பெல்லாம் இருக்கும

உகூ-உக பகுதிகளில் சொல்லியுள்ள பொருள்கள் விரிவாக 'The Evolution of Intellect in co-ordination with Form' என்கிற தலைப்பில் வேறாகப் பதிப்பில் வரும்.

பிறந்தமே இந்த மெய்ஞ்ஞானம் போன்ற சிலர் என்னிடத்து ஆணையை கொண்டு, தங்கள் வடிவைக் குட்டிச்சுவரடித்துக் கொள்ளுகின்றனர். எவ்வாறெனின், தலையிலுள்ள வாயின்றொழிலைச் சிறுகச் சிறுக விட்டொழித்துத, தலையைப் பெருக்கச் செய்து, வயிற்றை ஓட்டச் செய்து, பிறப்புறுப்புக்களைச் சுண்டிச் சுன்னமாக்கி, கீழே பார்ப்பதை விட்டு, நேரே பார்ப்பதை விட்டு, மேலே சுழிமுனையிலே பார்த்துப் பார்த்துக் கெடுகின்றனர். இத்தகையோர் சிறுபான்மையோரே.

௩௧. இவர்கள் தலையைப் பெருக்கி வாயைச் சுருக்குவானேன்? அவ்வாறே வயிற்றைச் சுருக்குவானேன்? சர்வம் அஜ்ஞான மயமா யிருக்கச்சே, அதாவது என்மயமா யிருக்கச்சே, எனக்கு எறும்பு புகக்கூடிய, பூச்சி, பூரான் புகக்கூடிய, குளிர் புகக்கூடிய, மெய்ஞ்ஞானம் புகக்கூடிய, காதுகளென்னும் ஓட்டைகளெதுக்கு? அவை மிகையன்றோ? அணிகள் தொங்கலாடுவதற்கு வேண்டிக் காதென்னும் தோல் இருந்தால் போதாதா? ஒலி புகும் தொளையில்லாக் காது தான் சரியான காது என்றது, அப்படியே ஒளிபுகாக் குருட்டுக் கண்களே சரியான கண்களென்றது, குளிர்காலத்தில் காதுக்குல்லாய் தேடுவதேன்? வெய்யலைக் காணில் புகையாடி தேடுவதேன்? என்னையன்றி, அதாவது அஜ்ஞானத்தையன்றி, வேறொன்று மில்லாதிருக்கச்சே, ஒருவன் சொல்வது என்னை விடப் புறம்பா யேதிருக்கும? ஒருவன் காட்டுவது என்னைவிடப் புறம்பா யேதிருக்கும்? புறம்பானவொன்று இல்லாத வரையில், கேட்கக் காதேதுக்கு? பார்க்கக் கண்ணேதிற்கு? அப்படியே முகர மூக்கேதுக்கு? இதெல்லாம் நன் காராய்ந்து என்னுடைய அஜ்ஞானச் செல்வங்களுக்குக், குருட்டுக்கண், செவிட்டுக்காது, மொண்ணை மூக்குப் போதுமென்று வைத்து, இவ்வாறோட்டைகளையும மீதி செய்ததை வீணாக்காமல், ஒருவருக்குங் கொடாதீ ஒண்டித் தீனியாகத் தின்ன ஓரே தொண்டியாக வாயைச்செய்தேன். அதற்கேற்ப உடலெல்லாம் வயிறும் இன்னொன்றுமாகச் செய்தேன். ஆகையால் என் வழி வழி வந்த அஜ்ஞானச் செல்வங்களை யறிவதற்கு மாத்திரைக்கோல் இதை வைத்துக் கொள்ளுங்கள். அதாவது—

**சிட்டுத்தலை, புட்டிவயிறு, தலையெல்லாம் வாய், உடலெல்லாம் வயிறும் இன்னொன்றும்.**

இவ்வங்கக்கூறுகளை யெங்கு காணினும் என்னருமைச் செல்வமென்று
ங்கள்.

என்னருமந்த செல்வர்களே! என்னருமைத் தம்பீ இஇ!! இப்போது உனக்கு முன்னே இவ்வளவு நேரம் என்னுடைய மூதுரிமையையும், என்னுடைய நற்பண்புகளையும், என்னுடைய செல்வாக்கையும், என்னுடைய வலிமையையும் என்னுடைய ஒப்பிலா அழகையும், இன்னும் பிறவற்றையும், எடுத்துக் காட்டினேனே: ஏதோ நீ ஆசைக்குப் பூண்ட பட்டத்தைப் பிடுங்கிக் கொள்வேனென்று அஞ்சாதே. யான் துய்த்துத் துய்த்துச் சலித்தது ஆகையினாலே, இக் குழுவை ஒழுங்கெடுத்துச் சொல்லி, உரியவன் யானாகையாலே, என்கைப்பட உனக்குப் பட்டங்கட்டி, உன்பட்டத்தை ஒழுங்கு படுத்திவைக்கவே வந்தேன். எனக்கு ஐரோப்பியநாட்டில் வேலையிருக்கிறது; அவ்விடம் தமிழை மாத்திரம் எடுத்துக்கொண்டு போய்வருகிறேன்.*

இந்தா தம்பி! மெய்ஞ்ஞானம்! அஞ்ஞான ராஜ்யம்,
காருள்ளளவும், கடல்நீருள்ளளவும்,
பாருள்ளளவும், அஞ்ஞானப் பேருள்ளளவும்,
தந்தேன்! தந்தேன்! தந்தேன்!..............(இந்தா)

அஞ்ஞானம்.



* தமிழை மாத்திரம் எடுத்துக்கொண்டு போவதாகச் சொல்லியது அஞ்ஞான ராஜ்யத்தில் தமிழ் சேராததாகலின். மற்ற அஞ்ஞானமயமான யாவையும் தத்தம் செய்து, ஞானமயமான தமிழைக்கொடாது வைத்ததென்றபடி.

இந்தப்பல்லவி அருணாசலக் கவிராயரின் இராமாயணக் கீர்த்தனையில் 'இந்தா விபீஷணா இலங்காபுரி ராஜ்யம்' என்ற கீர்த்தனையைத் திரித்தது. அங்கு இராமன் தன் சொந்தமில்லா லங்கையைத் தத்தம் செய்கிறான். இங்கு இவள் தன் சொந்தமான அஞ்ஞான ராஜ்யத்தைத் தத்தம் செய்வது அதனினும் பொருத்தமானது.

Printed by Jegam & Co., Dodson Press, Teppakulam, Trichinopoly.